25th September 1961]

THE HON. SRI M. A. MANICKAVELU : The proposal is to transfer an extent of 30·60 acres from grazing ground poramboke to village-side poramboke and give house-sites to the houseless at the rate of 5 per cents per family.

*Flood Relief Works—Government officials*

* 1798 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of Sri M. P. SARATHI) : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தமிழ்நாட்டில் இப்போது ஏற்பட்ட வெள்ளத்தின் நிவாரண வேலைகளில் ஈடுபட்டிருந்த அரசாங்க ஊழியர்கள் எவரேனும் உயிர் இழந்தனரா ?

(இ) எந்த இலாகாவைச் சேர்ந்தவர்கள் ? எத்தனை பேர் ?

(உ) அவர்கள் குடும்பத்திற்கு அரசாங்கம் என்ன நஷ்ட ஈடு கொடுத்துள்ளனர் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) No. Sir.
(இ) & (உ) Do not arise.

*Local Fund Hospital (Pennadam)*

* 1799 *Q.*—SRI A. GOVINDASAMY (on behalf of SRI M. SELVARAJ): கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

விருத்தாசலம் தாலுக்கா பெண்ணாடம் லோகல் பண்ட் ஆஸ்பத்திரியை சர்க்கார் எடுத்துக்கொள்ள உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

SRI A. GOVINDASAMY : ஜில்லா போர்டு நிர்வாகத்தில் உள்ள ஆஸ்பத்திரிகளில் டாக்டர் இருந்தால் மருந்து இருப்பதில்லை, மருந்து இருந்தால் டாக்டர் இருப்பதில்லை என்ற நிலை இருக்கிறது. அதை மாற்றுவதற்காக பெண்ணாடத்திலுள்ள லோகல் பண்டு ஆஸ்பத்திரியை சர்க்கார் ஆஸ்பத்திரியாக மாற்றுவது பற்றி அரசாங்கம் மீண்டும் ஆலோசிக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : புதிய பஞ்சாயத்துச் சட்டப் பிரகாரம், படுக்கையில்லாத ஆஸ்பத்திரி அல்லது டிஸ்பென்ஸரி எல்லாம் பஞ்சாயத்து யூனியனுடைய பொறுப்பில் வந்துவிடுகிறது. படுக்கை இருந்தால், அதை அரசாங்கம் எடுத்துக்கொள்ளும். இதிலே அம்மாதிரி படுக்கை இருக்கிறதாகத் தெரியவில்லை. அதோடு, அரசாங்கம் எந்த ஆஸ்பத்திரியை எடுத்துக்கொள்வதாக இருந்தாலும், பொதுமக்களுடைய சகாயம் இருந்தால் முதலில் அதை எடுத்துக்கொள்கிறது. அந்த அடிப்படையில்தான் ஆம்பூரில் உள்ளதை எடுத்துக்கொண்டோம். பொதுமக்களுடைய சகாயம் இல்லாவிட்டால், மிச்சம் இருந்தால் அப்பொழுது கவனிக்கிறோம்.

*Government Hospital, Vellore—Death of Patrent in*

* 1800 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI P. U. SHANMUGAM) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether it is a fact that the wife of a Government Official admitted for confinement in the Government Hospital at Vellore during the last week of May 1961, died in the Hospital; and

(b) if so, the reason thereof ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) & (b) It is presumed that the Hon. Member refers to the case of Srimathi Sivagnanam, who died on 11th May 1961 in the District Headquarters Hospital, Vellore, on account of Post-mortum Haemorrhage and obstetrical shock.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that there is a tendency to put the entire blame on the doctors in the hospitals even in cases of natural deaths?

THE HON. SRI M. A. MANICKAVELU : Yes, that is a deplorable tendency.

*Government Hospital, Dindigul—Blood Bank*

* 1801 *Q.*—SRI T. KARIA GOUNDER (on behalf of Dr. SRIMATHI T.S. SOUNDARAMMA RAMACHANDRAN) : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

திண்டுக்கல் சர்க்கார் ஆஸ்பத்திரியில் Blood Bank நிறுவ திட்டம் உண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : Yes, Sir. Orders have already been issued last year.

*Lands—Poramboke (Tirunelveli district)*

* 1802 *Q.*—SRI R. J. SUNDAR SINGH : Will the Hon. the Minister for Revenue be pleased to state the extent of (i) poramboke and (ii) odai poramboke now under unauthorised occupation in Mullakad village, Srivaikuntam taluk, Tirunelveli district ?

THE HON. SRI M. A. MANICKAVELU : An extent of 190·41 acres in odai poramboke, and an extent of 121·31 acres in other porambokes are under encroachments in Mullakad village.

SRI R. J. SUNDAR SING : ஓடைப் புறம்போக்கு நிலத்தில் ஆக்கிரமித்திருக்கிறவர்களை அப்புறப்படுத்துவதற்கு அரசாங்கம் ஏதாவது நடவடிக்கை எடுத்திருக்கிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : ஆட்சேபணைக்கான நிலமும் இருக்கிறது. ஆட்சேபணை இல்லாத நிலமும் இருக்கிறது. ஆட்சேபணை இல்லாத நிலத்தை அவர்களுக்கு "அசைன்" பண்ணுகிறதாக உத்தேசம்.

SRI M. K. SOMASUNDARAM : ஓடை புறம்போக்கு நிலம் விவசாயத்திற்காக ஆக்கிரமித்துக்கொள்ளப்பட்டிருக்கிறதா ? அல்லது வீடு கட்டிக் கொள்வதன் மூலம் ஆக்கிரமித்துக்கொள்ளப்பட்டிருக்கிறதா ? அப்படி ஆக்கிரமித்துக்கொண்டிருக்கிறவர்களுக்கே அவற்றை பட்டா செய்து கொடுக்க இடம் இருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : எதற்கு என்று உடனடியாகத் தெரியவில்லை. விஸ்தீரணம் அதிகமாக இருப்பதினாலே சாகுபடிக்கும் இருக்கலாம் என்பது ஹேஷ்யம். மற்ற விவரங்கள் வேண்டுமென்றால் தனியாகக் கேள்வி போடவேண்டும்.

SRI R. KRISANASAMI NAIDU : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தப் புறம்போக்கு நிலங்களை ஆக்கிரமித்துக்கொண்டு விவசாயம் செய்ய வேண்டும், வீடுகள் கட்டிக்கொள்ள வேண்டும், அப்போதுதான்